27th March 1961]

SRI A. VEDARATHNAM : மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இதையெல்லாம் வன விலங்கு சரணாலயங்களாக எடுத்துக் கொள்ளவேண்டுமென்றால் இப்பொழுதே அதற்கான பூர்வாங்க வேலைகள் நடைபெற வேண்டுமே, அவை ஏதாவது நடைபெற்று வருகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் உத்தேசம். இப்பொழுது பூர்வாங்க வேலைகள் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. இது விஷயத்தில் 1,05,000 ரூபாய் கூட ஒதுக்கப் பட்டிருக்கிறது.

SRI N. K. PALANISAMI : May I know whether there was a proposal to start a sanctuary in the Kanyakumari district and if so, whether that proposal has been dropped?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முத்துக்குழிவயல் என்று சொன்னேனே, அது கன்னியாகுமரியைச் சேர்ந்ததுதான்.

SRI N. MARUDACHALAM : கோவையில் ஒரு வன விலங்கு சரணாலயம் எடுத்துக்கொள்ள முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவோ எடுத்துக்கொள்ளலாம். இப்பொழுது நான்கு எடுத்துக் கொள்ள உத்தேசம்.

*Bill-collectors (promotion)*

* 1110 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வட ஆற்காடு மாவட்டம், ஆரணி நகராட்சி மன்றத்தில் கலெக்டர்களின் உத்தியோக உயர்வு குறித்தும், இன்னும் சில சலுகைகளைக் குறித்தும் 1960-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 29-ம் தேதியில் நகராட்சி மன்றத்தால் நிறைவேற்றிய தீர்மானம் கிடைத்ததா ?

(இ) அப்படியாயின், அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : (அ) No such resolution has been received by Government.

(இ) The question does not arise.

*Dealers in old bottles (sales tax)*

* 1111 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கோயம்புத்தூர் பழைய மார்க்கெட் வியாபாரிகளின் சங்கச் செயலாளர் அவர்களின் 20—1—1961 தேதியிட்ட பழைய பாட்டில் (old scrap bottles) வியாபாரிகள் மீது விதித்துள்ள விற்பனை வரியை ரத்து செய்யும்படி கோரிய மனு கிடைத்ததா ?